உன்னையும் துண்டித்து, அங்ஙனம் வெற்றிதந்த எனது வாட்படையை யான் வணங்குவதேயல்லாமல் பிறரை வணங்குவதென்பதுமுண்டோ?'' என்று சொல்லி நகைத்தனன்.

## — பகவான் இரணியனை முடித்து பக்தாநுக்ரஹம் செய்தல் —

நகைத்ததோடும் நில்லாமல் மிக்க கோபங்கொண்டு அந்நரசிங்க மூர்த்தியை எதிர்த்தற்கும் நெருங்கினன். அப்போது அத்திருமால் மிகப் பலவான தனது கைகளினாலும் கால்களினாலும் அவ்விரணியனைச் சூழ்ந்துகட்டிப் பிடித்தனன். தனது பெரிய கைகளிலொன்றினால் அவ்விரணியனது கால்களிரண்டையும் ஒருசேரப்பிடித்துச் சுழற்றினன். அப்போது இரணியனது காதுகளிலணிந்திருந்த இரண்டு கனமகரக் குழைகளும் சிதறி நெடுந்தூரத்துக்கப்பால் சென்று விழுந்தொழிந்தன. இங்ஙனே அவனைப் படாதபாடுகள் படுத்தி மடியிடைவைத்துக் கைந்நகங்களை அவனது மார்பில் ஊன்றியவளவிலே இரத்தவெள்ளம் அபரிமிதமாகப் பெருகிற்று. அசுரர்கோமான் தொலைந்தொழிந்தனனென்று, இதுவரையில் அவனுக்கு அஞ்சியோடியொளித்திருந்த தேவர்கள் முதலியோர் அச்சமின்றி அங்குவந்து நெருங்கிநின்று தேறித் துதித்துவணங்க, சிங்கப்பிரான் சீற்றந்தணிந்து தன் கையில் அபயமுத்திரையைக் காட்டியருள, அப்போதும் பயந்தெளியாத தேவர்கள் பெரியபிராட்டியாரை அச்சிங்கப் பிரானருகில் செல்லும்படி பிரார்த்தித்து அனுப்ப, தன்னருகில் வந்த அத்திருமகளை அருளொடு நோக்கிச் சினந்தணிந்த சிங்கப்பிரான் பரமபக்தமணியான பிரகலாதனைப் பேரன்போடு கடாக்ஷித்தருளி "உனது தந்தையை உனது முன்னிலையிலே யான் உடம்பைப் பிளந்தளைந்து கொள்ளவும் மனந்தளராமல் என்னிடத்தே அன்பைச்செலுத்தியிருக்கின்ற உனக்கு யான் என்னவுதவி செய்வேன்!; உனக்குச்செய்ய வேண்டிய உதவி ஏதேனுமுளதாயின் சங்கோசமின்றி விரைவிற் சொல்வாய்" என்று கூறியருள; அதற்குப் பிரகலாதன் 'திருமாலே! உனது திருவருளால் யான்பெற்ற நன்மைகளோ எல்லையிலாதன; இன்னமும் யான் பெறவேண்டிய நன்மை ஒன்றுளதோ? உள்ளதாயின், யான் ஒரு புழுவின் சன்மத்தைப்பெற்றாலும் நின்பக்கல் பக்தி குன்றாதிருக்கப் பெறுதலே யான்வேண்டும் வரமாம்' என்று கூற, திருவுள்ள மிரங்கிய திருமால், 'அன்பர்தலைவ! பஞ்ச பூதங்களெல்லாமழிந்தாலும் அழியாமல் நீ என்னைப்போல எக்காலத்திலுமுள்ளவனாவாய்; எக்காலத்தும் மாறாது வளரு மன்புடையையாவாய்' என்று வரமளித்து, தேவர்களை நோக்கிப் பிரகலாதனுக்கு முடிசூட்ட முயலுமாறு நியமித்து அந்தர்த்தானமடைந்தனன். தேவர்களும் அக்கட்டளையின்படியே முடிசூட்ட, பிரகலாதன் அரசர்கட்குமரசனாய் மூவுலகங்களையும் தன்வசத்திற்கொண்டு இனிது வாழ்ந்து வந்தனன். ... ... ... ... (*)

# கண்டீரவாவதார காரண நிரூபணம்.

---

**திருமால் நரகண்டீரவாவதாரம் செய்தருளின வரலாறுகள் கீழேவிரிவாக விளக்கப்பட்டன. இதன் தொடர்ச்சியாகவே ரஸ்யரஹஸ்யமான வியாஸமொன்று எழுதப்படுகின்றது. இதனை ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்கள் ஊன்றியநுபவிப்பது.**

ஆச்ரிதாநுக்ரஹ சீலனும் ஆச்ரிதவிரோதி நிக்ரஹ சீலனுமான எம்பெருமான் செய்தருளின அவதாரங்களுள் "எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்து, இங்கில்லை யாலென்றிரணியன் தூண்புடைப்ப, அங்கப்பொழுதே அவன் வீயத் தோன்றிய என் சிங்கப்பிரான் பெருமை ஆராயுஞ் சீர்மைத்தே" என்பது முதலான பலபல பாசுரங்களினால் ஆழ்வார்கள் அற்புதமாக அநுபவித்துப் பேசின நரஸிம்ஹாவதாரத்தின் முக்கிய காரணத்தைப் பற்றிச் சிறிது விமர்சிப்போம். இவ்வவதாரத்திற்குச் சொல்லப்படுங் காரணங்களுள் பிரதானமானது எதுவென்றால், பரமபக்த சிகாமணியான ப்ரஹ்லாதாழ்வான் திறத்தில் இரணியன் பட்ட அபசாரங்களைப் பகவான் பொறுத்திருக்கமாட்டாமையே—என்பதாம். இதனைப் பொய்கை யாழ்வார் தமது திருவந்தாதியில் "வரத்தால் வலி நினைந்து மாதவ! நின்பாதம், சிரத்தால் வணங்கானாமென்றே?—உரத்தினால், ஈரரியாய் நேர்வலியோனாய விரணியனை, ஓரரியாய் நீயிடந்த தூன்." (90) என்கிற பாசுரத்தில் ஆலங்காரிகர்களுக்கு உயிரான த்வநி மர்யாதையினால் வெளியிட்டருளியுள்ளார். இப் பாசுரத்தின் சீரிய பொருளை ரஸிகர்கள் அநுபவித்து அகங் குழையுமாறு ஈண்டு விவரிக்க ப்ராப்தமாகிறது.

இப்பாட்டின் பின்னடிகளை முன்னம் அந்வயித்துக்கொண்டு பிறகு பின்னடிகளை அந்வயிப்பது. "மாதவ! நீ ஈரரியாய் நேர்வலியோனாய விரணியனை ஓரரியாய் ஊனிடந்தது—(அவன்) வரத்தால் வலி நினைந்து நின்பாதம் சிரத்தால் வணங்கானா மென்றே?" என்று அந்வயித்து வினாவாகப் பொருள் கொள்வது. திருமாலே! நீ நரசிங்க மூர்த்தியாய்க் கிளர்ந்து இரணியனை உடல் கிழித்துப் பொகட்டதானது அவ்வரக்கன் உன்னுடைய திருவடிகளிலே தலை சாய்க்கவில்லை யென்கிற காரணத்தினாலோ? (அன்று.) என்றிவ்வளவே பாசுரத்தின் பொருள். கேள்வி மாத்திரம் இங்கு உள்ளதே யன்றிக் கேள்விக்கு உத்தரம் இங்கில்லை. பரமரஸிகர்களின் பேச்சினழகு இங்ஙனே யாயிற்று இருக்கும்படி. தம் திருவுள்ளத்திலோடுகிற அர்த்தத்தை வெட்ட வெளிச்சமாக வெளியிட்டு விடாமல் மறைத்து வைத்துக்கொண்டு அது வெளிவர வேண்டியதான கேள்வியை மாத்திரம் இயற்றி வைப்பது ஒரு சமத்காரம். இந்த ரீதி ஆழ்

வாரருளிச் செயல்களிலும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளிலும் மஹா கவிகளின் காவியங்களிலும் இனிது காணக் கிடைக்கும். மாதவனே! இரணியன் உன்னிடத்தில் ஆபிமுக்க்யம் பண்ணவில்லை யென்பதற்காகவா அவனை நீ வதைத்தாய்? என்றுள்ள இந்த வினவானது, "அதற்காகவன்று; பக்தர்களில் தலைவனை ப்ரஹ்லாதாழ்வானிடத்தில் அவன் கனக்க அபசாரப்பட்டானென்பதற்காகவே அவனை நீ வதைத்தது" என்கிற விசேஷார்த்த ரூபமான விடையைப் பெறுவிக்க வல்லது. இந்த வினவுக்கு இதுதான் விடை என்பதை நம்முடைய பூருவாசாரியர்கள் பலரும் பல முகமாக வெளியிட்டுள்ளார்கள்.

ஆழ்வாரருளிச் செயல்களில் பொதிந்துள்ள அர்த்த விசேஷங்களைப் பெரும்பாலும் வெளியிடுவதற்கென்றே ஸ்தவங்களை யருளிச்செய்த கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில்—"யதபராத ஸஹஸ்ரமஜஸ்ரஜம் த்வயி சரண்ய! ஹிரண்ய உபாவஹத்; வரத! தேந சிரம் த்வமவிக்ரியோ விக்ருதி மர்ப்பகநிர்ப்பஜநாதகா:" என்கிற அறுபத்தெட்டாவது ச்லோகம் பொய்கையாழ்வாருடைய இந்தப் பாசுரத்தின் உட்பொருளை [விடையை] விளக்குவதற்கென்றே தோன்றியது. 'பேரருளாளனே! இரணியன் உன் திறத்தில் எத்தனையோ காலமாக எல்லை கடந்த அபராதங்களைச் செய்திருக்கச் செய்தேயும் அதனால் சிறிதும் சீற்றங்கொள்ளாமலிருந்த நீ, சிறுக்கனான ப்ரஹ்லாதனை அவன் நலிந்தது காரணமாகவன்றோ வேறுபாடுற்றாய்' என்பது இந்த ச்லோகத்தின் ஸ்பஷ்டமான பொருள். பொய்கையார் பாசுரத்திலுள்ள வினவுக்கு இது விடையாக அமைந்தது. எம்பெருமான் தன்னளவில் த்வேஷிக்குமவர்களைக் காட்டிலும் தன்னடியார்கள் திறத்தில் த்வேஷிக்குமவர்களையே முக்கியமாக நிக்ரஹிப்பது என்கிற மஹத்தான சாஸ்த்ரார்த்தம் வெளிவருவது இங்கு ரஸிக்கத் தக்கது. "த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத்; பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணாஹி பாண்டவா:" என்கிற கண்ணபிரானுடைய உக்தியைக் கொண்டும், "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம்கார்யம் ஸீதயா மம?" என்கிற இராமபிரானுடைய உக்தியைக் கொண்டும் இந்த சாஸ்த்ரார்த்தத்தை நம் ஆசார்யர்கள் நிலையிட்டார்கள்.

ஸ்ரீவசநபூஷணத்தில்—"ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயர் அருளிச் செய்வர்" என்றுள்ள ஸ்ரீஸூக்தி இந்த சாஸ்த்ரார்த்தத்தைச் செவ்வனே வெளியிடுவது. இந்த சூர்ணிகையின் பொருளாவது—ஸங்கல்ப மாத்ரத்தாலே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன் தன்னையழிய மாறி இதர ஸஜாதீயனாய் அவதரித்துக் கைதொட்டுச் செய்த ஹிரண்ய ராவணாதி நிரஸநமாகிற அதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம், ப்ரஹ்லாதாழ்வான் மஹர்ஷிகள் முதலான பாகவத

விஷயங்களில் அவ்வவர்கள் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே யென்று நஞ்சீயர் அருளிச் செய்வர்—என்பதாம். "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்" என்கிற கீதா ச்லோகத்தில் எம்பெருமானுடைய அவதாரத்திற்கு ப்ரயோஜநமாக ஸாது பரித்ராணமும் துஷ்க்ருத் விநாசநமும்......சொல்லப்பட்டன. இவற்றுள் துஷ்க்ருத் விநாசனமானது [ஹிரண்ய ராவணாதிகளைக் கொலை செய்வது] ஸங்கல்பத்தினாலும் ஸாத்யமென்றும், ஸாது பரித்ராணமானது அப்படி ஸங்கல்ப ஸாத்யமன்றிக்கே நேர் கொடு நேரே அவதரித்தே செய்யக் கூடியதென்றும், ஆகவே ஸாது பரித்ராணந்தான் அவதாரத்திற்கு ப்ரதாந ப்ரயோஜநமென்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் முதலான ஆசார்யர்கள் ஏக கண்டமாக நிர்வஹிப்பர்கள். ஆனாலும், ஸாது பரித்ராண மென்பதை விவரிக்குமிடத்து, அநிஷ்ட நிவாரணமும் இஷ்டப்ராபணமும் சேர்ந்தே பரித்ராணமாகுமாதலால் அநிஷ்டநிவாரணம் செய்யாதவளவில் பரித்ராணம் பூர்த்தி பெறாதாதலால் அநிஷ்டநிவாரணமும் மிக முக்கியமான காரியமாயிற்று. இது ஸங்கல்பத்தாலேயே செய்யக் கூடியதாயிருக்கச் செய்தேயும் எம்பெருமான் அடியார்களிடத்து வைத்த அன்புமிகுதியினால் ஸங்கல்பத்தால் செய்துவிடாமல், கண்காண வந்து நேர்நின்று போர்புரிந்து சித்ரவதங்களைப் பண்ணியே திருவுள்ளத்தில் தேறுதலடைகின்றானென்று பிரமாணங்களினால் தெரியவருவதால் பக்தவத்ஸலனான பகவான் பக்தவிரோதிகளை நிரஸிப்பதற்காகவே திருவவதாரங்கள் செய்தருள்கின்றானென்றும் அறுதியிட வேண்டிற்றாயிற்று.

அஸுர ராக்ஷஸப்ரப்ருதிகள் பகவானிடத்தில் நேராகவே விரோதிப்பவர்களுமுண்டு; பகவத் பக்தர்களை விரோதிப்பவர்களுமுண்டு. கம்ஸனைப் பற்றிச் சொல்லுகையில், பெரியாழ்வார் "தீய புந்திக்கஞ்சனுன்மேல் சினமுடையன் சோர்வு பார்த்து, மாயந்தன்னால் வலைப்படுக்கில்" என்று அவன் பகவத் விரோதியென்று பேசினார். நம்மாழ்வார் "சாது சனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ் சோதியுருவை யங்கு வைத்திங்குப்பிறந்த" என்ற பாசுரத்தில் அவனை பாகவத விரோதியென்றே விளக்கினார். இங்ஙனே இரண்டு விதமான தன்மைகள் ஆஸுர ப்ரக்ருதிகளுக்கு இருக்கவும், எம்பெருமான் "ந ஸ்மரத்யபகாராணாம் சதமபி ஆத்மவத்தயா" என்று புகழப்பட்ட குணக்கடலாதலால் தன் விஷயத்தில் தீங்கு செய்பவர்களிடத்தில் சீற்றங் கொள்ளாமல் தன்னடியார்களிடத்தில் தீங்கு செய்பவர்களையே களைந்தொழிக்கக் கிளர்கின்றானென்றால் இதுவன்றோ மிகச் சிறந்த மஹா குணம்.

தண்ணளியில் தண்ணீர்போன்ற பகவானுக்குப் பகைவர் இருக்க முடியாது. கீதையில் "ஸமோஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:" என்கிறான் எம்பெருமான் தானே. "தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம்" என்று துதிக்கிறான் நான்முகன். இப்படிப்பட்ட

பகவான் சிலரையோ பலரையோ விரோதிகளாகக் கொண்டு நலிகிறானென்றால், இதை எங்ஙனே பொருந்தவைக்கவேணும் தெரியுமா? தன்னடியார்களுக்கு த்ரோஹம் செய்பவர்களைத் தனக்கு த்ரோஹிகளாகத் தான் நினைக்குமவனுகையாலே—என்று இவ்விஷயம் பலபல ப்ரமாண உபபத்திகளுடன் வேதாந்தவாசிரியருட்பட ஸகல ஆசார்யர்களாலும் மூதலிக்கப் பட்டுள்ளது,

"தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந், க்ஷிபாமி" என்பது முதலான பிரமாணங்களினல் ஏற்படுகிற அர்த்தத்திற்கு இவ் வர்த்தம் சிறிதும் விரோதியன்று. "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்கிற கீதாச்லோகமொன்றை யெடுத்துக் கொள்வோம். "**ஜகத் ஸர்வம் சரீரம் தே**" என்பது முதலான பல பிரமாணங்களினல் ஸகல பதார்த்தங்களும் பகவானுக்கு சரீரபூதங்களென்றும், பகவானொருவனே உயிர்க்கும் உயிரானவனென்றும் அசைக்க முடியாதபடி தேறியுள்ள விஷயம். இஃது இப்படியிருக்க "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்கிறான் தானே. இங்கு **மே மதம்** என்றதன் ஸ்வாரஸ்யத்தை தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி தேசிகன் வெகு அற்புதமாக எடுத்துக்காட்டுகின்றார். கீதையில் கண்ணன் சோதிவாய் திறந்து தான் சொல்லுகிற அர்த்தமெல்லாம் தன்னுடைய மதமாயிருக்க, இங்கு விசேஷித்து **மே மதம்** என்ன வேண்டுமோ? எதற்காக இங்கு **மே மதமென்று** னென்னில்; "இவ்வர்த்தம் வேதாந்தங்களுக்கு இணங்கின ஸித்தாந்தமாக இருந்தாலிருக்கட்டும்; இல்லாமற் போனல் போகட்டும்; தேர்த்தட்டிலே கண்ண பிரானுக வீற்றிருந்து சொல்லுகிற என்னுடைய ஸித்தாந்தம் இதுவே— என்பதாக ஸ்ரீ க்ருஷ்ண ஹ்ருதயத்தை விவரித்தருளினர் நம் தேசிகர். இதனல், ஸகல சாஸ்த்ரங்களும் ஒரு தட்டாய் 'ஜ்ஞாநீது ஆத்மைவ" என்கிற இவ்வசனம் ஒரு தட்டாய் இதுவே மேன்மை பெற்றதென்று தேறிற்று. இளையபெருமாளை நோக்கி "த்விதீயம் மேந்தராத்மாநம் த்வாம்" என்று பெருமாளருளிச் செய்ததைக் கொண்டும் ஆசார்யர்கள் ரஸமயமான அர்த்தத்தை வெளியிட்டார்கள். ஸ்தோத்ர ரத்நத்தில் "மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹ:" என்ற ஸ்ரீஸூக்தி ரத்நத்தில் இவ் வர்த்த விசேஷங்களெல்லாம் ஜ்வலிக்கும். பகவத்விஷய திவ்யக்ரந்தத் தேனிலூறித் தேறித் தெளிந்தவர்களுக்கே நிலமான இவ்வர்த்த விசேஷங்கள் பிறர்க்கு ரஸிக்க விரகில்லை.

பகவான் தன்னிடத்தில் ஸாக்ஷாத் பக்தி செய்யும் அன்பர்களிற் காட்டிலும் "அடியாரடியார் தம்மடியார் தமக்கடியாரடியார் தம் அடியாரடியோங்களே" என்றும் "த்வத் ப்ருத்ய ப்ருத்ய பரிசாரக ப்ருத்ய ப்ருத்ய ப்ருத்யஸ்ய ப்ருத்ய:" என்றும் இருப்பார் திறத்திலே "யஸ் ஸப்தபர்வவ்யவதாந துங்காம் சேஷத்வ காஷ்டாமபஜந்முராரே:" **என்று பாதுகா ஸஹஸ்ரத்தில் பணிக்கும்படி பரம காஷ்டாபந்நமான**

சேஷத்வத்தில் ஊன்றியிருக்குமவர்களிடத்திலே அளவுகடந்த வாத்ஸல்ய முடையவன் என்றால் இதில் யாருக்காவது விப்ரதிபத்தியுண்டோ? விவாத முண்டோ? இதுபோலவே, பகவான் தன்னிடத்தில் தீமை செய்யுமவர் களிற் காட்டிலும் தன்னடியாரடியாரடியார் திறத்தில் தீமை செய்யுமவர் களிடத்தில் அதிகமான நிக்ரஹருசியையுடையவன் என்றால் இதில் என்ன விப்ரதிபத்தி? என்ன விவாதம்? தேசிகன் யதிராஜ ஸப்ததியில் "அநுகல் பூதமுரபித்பதம் ஸதாம்.... சரணம் யதீந்த்ர சரணம் வ்ருணீமஹே" என் கிறார். ஸத்துக்கள் வணங்குதவற்கு எம்பெருமானுடைய திருவடிகள் கௌணபக்ஷமேயல்லது முக்ய பக்ஷமல்ல வென்றும், ஸ்ரீபாஷ்யகார ருடைய திருவடிகளே முக்யபக்ஷமென்றும் இதனால் நிஸ்ஸந்தேஹமாய் ஸுஸ்பஷ்டமாய்க் கிடைக்கிறது. பகவானுடைய திருவடிகளை முக்யகல்ப மாகக் கொண்டு வரிப்பவர்கள் ஸத்துக்களல்லர், அஸத்துக்கள் என்று கூட இதனால் தேறுகிறது. இதைப் பற்றி விசாரமெடுத்துக் கொள்ள வேண்டியதும் அவசியம். பிறர், இதெல்லாம் அதிவாதமென்றே யிகழ் வர். அவர்களுக்கு இது தவிர வேறு வழியில்லை. ஸகல சாஸ்த்ரஸாரஜ் ஞர்களோ வென்னில், இதுதான் வடிக்கட்டின சாஸ்த்ரார்த்த மென்று புகழ்வர்களே யன்றி இகழார்கள். "அன்பர்க்கே யவதரிக்கு மாயன் நிற்க அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு, துன்பற்ற மதுர கவி தோன்றக்காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே" என் றும் கல் வெட்டாக தேசிகன் அருளிச் செய்திருப்பது ஆராயத் தக்கது. இவர் தாம் இப்படி யருளிச் செய்தது—"உண்ட போதொரு வார்த்தை யும் உண்ணாத போதொரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப் பேருண் டிறே; அவர்கள் பாசுரம் கொண்டன்று இவ்வர்த்தமறுதியிடுவது; அவர் களைச் சிரித்திருப்பாரொருவருண்டிறே; அவர் பாசுரங்கொண்டு இவ் வர்த்த மறுதியிடக் கடவோம்." என்கிற ஸ்ரீவசந பூஷண திவ்யஸூக்தியில் ஆதரத்தினாலாதலால் அந்தப் பாசுரமும் அதிவாதமென்றிட்டு இகழவும் பிறர் ஸஜ்ஜர்களென்பதை நன்கறிவோம். "அன்னவர்களால் இகழப் படுகை தானே சிறந்த சாஸ்த்ரார்த்தமென்கைக்கு முக்கியமான அறி குறி" யென்று ஞானப்பிரான் வார்த்தை. இதை நியமேந எஞ்ஞான்று மெங்கும் பார்த்துக் கொள்ளலாம். தேசிகனுட்பட ஸகல ஆசார்யர்களும் ரஸகநமாகவும் நிஷ்கண்டகமாகவும் நிலைநாட்டியுள்ள சாஸ்த்ரார்த்தங் களையே ஆக்ஷேபிக்கவும் அதிக்ஷேபிக்கவுமன்றோ பிறர் தீக்ஷிதர்கள்.

ப்ரக்ருதம் விசாரத்திற் கொண்ட பொய்கையார் பாசுரத்திற்கு நாம் விவரித்ததே நற்பொருள் என்பது பூருவர்களின் வியாக்கியானத்திலும் ஸித்தம்; அப்பிள்ளையுரை ஸ்ரீஸூக்திகள் வருமாறு;—"நாட்டில் கண்டறி யாத அத்விதீயமான ந்ருஸிம்ஹமாய்க் கொண்டு அவனுடைய மாம்ஸள மான பெரிய சரீரத்தை ஆச்ரிதவத்ஸலனான நீ இடந்து பொகட்டது ப்ரஹ்மாதிகள் கொடுத்த வரத்தால் வந்த தன் மிடுக்கைக் கனக்கநினைத்து ஸர்வாதிகனான வுன்னுடைய திருவடிகளைத் தலையாலே வணங்கி ஆச்ரயி

யாதே யிருந்தான் என்றோ? அன்றிறே; சிறுக்கனைப் பலவாறு கறுவி நலிந்தானென்னுமிது கொண்டிறே யென்றபடி." என்று.

பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் ஸம்க்ஷிப்தமாதலால் அதற்கு விசதீகரணமாகவே மேற்குறித்த உரை ஸ்ரீஸூக்திகள் அவதரித்துள்ளன. பெரியவாச்சான் பிள்ளை அவதாரிகையிலேயே உயிர் நிலையை விளக்கியருளினர். அதாவது—"(வரத்தால்) நரஸிம்ஹ ரூபியான ஈச்வரனுடைய ஆச்ரித விரோதி நிரஸந சீலத்தையும் வாத்ஸல்யத்தையும் அநுஸந்திக்கிறார்" என்பது அவதாரிகை. இங்கு ஆச்ரித விரோதி யென்கிற சொல்லுக்கு மூலத்தில் நிதானமேதென்று பார்க்கவேணும். மூலத்தில் என்றோ! என்கிற வினவினல் விளங்கும் பொருளைப் பெரியவாச்சான் பிள்ளை [மேல் வியாக்கியானத்தில்] இரண்டு வகையாக நிரூபித்தருளியுள்ளார். சிறுக்கனை ப்ரஹ்லாதன் விஷயத்தில் பரிவு தப்பி நடந்து கொண்டதற்காகவே என்பது ஒரு பொருள். [உன் வஸ்து அழியாமைக்கு என்று மற்றொரு பொருள். இதைப்பற்றின விவரணம் இங்கு அநபேக்ஷிதமென்று விடுக்கப்பட்டது.]

இந்தப் பாசுரத்தை வியாக்கியானிப்பவராகவே கூரத்தாழ்வான் வரதராஜ ஸ்தவத்தில் * யதபராதஸஹஸ்ரம் * இத்யாதி ச்லோகமருளிச் செய்தாரென்னுமிடத்தை நம்முடைய திருவந்தாதி திவ்யார்த்த தீபிகை கொண்டும் வரதராஜஸ்தவ வியாக்கியானங் கொண்டும் விளக்கமாக அறிவது.

அருளிச் செயலுக்கு வைதேசிகர்களும் சொற்சுவை பொருட்சுவை யொன்றிலும் நாடீஜ்ஞானமில்லாதவர்களுமான பிறர் இப் பாசுரத்திற்குக் கொள்ளும் பொருள் அநுவாதத்திற்கும் அநர்ஹமானது. "நின்பாதம் சிரத்தால் வணங்கானுமென்றே" என்றதை ப்ரதிக்ஷேபார்த்தமான வினவாகக் கொள்ளாமல் ஹேது நிர்ணயகமாகக் கொள்வர் பிறர். இரணியன் உன் திருவடிகளிலே தலை சாய்க்கவில்லை யென்கிற காரணத்தினலேயே அவனை நீ வதைத்தாய் என்று சொல்லுவதுதான் இப்பாசுரத்தின் ப்ரமேயம் என்பதாகப் பிறரது கூற்று. அவர்களது கொள்கை அங்ஙனமேயாகுக. பிரானே! உன்னளவில் பிறர் படும் அபசாரங்களை நீ பொருள் படுத்துவாயல்லை; உன்னடியார்கள் பக்கலிலே அபசாரப் படுமவர்களை க்ஷமிக்ககில்லாய்—என்று ஆசார்யர்கள் சுவைமிக நிர்வஹிக்கும் பொருளில் அவர்களுக்கு விப்ரதிபத்தி யுதிக்கக் காரணமென்ன? என்பதொன்றே நமக்கு ஜிஜ்ஞாஸிதம்.

ஸாமான்யமாக உலகில், ஒருவர் தம் பக்கல் குற்றம் செய்பவர்களிடத்தில் பொறுமையுடனிருந்து தம்முடையார்கள் பக்கல் குற்றம் செய்பவர்களிடத்தில் சீறிச் சிவந்து சிதைக்கின்றாரென்றால் இது மிகச் சிறந்த குணமாகக் கொண்டாடப்படுகின்றதென்பதில் யார்க்கும் விவாதமில்லை.

இக்குணம் குணக்கடலான எம்பெருமானிடத்தில் ஏதனால் அஸஹ்ய மாகிறதென்றறிகின்றிலோம்.

"பக்தஸ்ய தாநவசிசோ: பரிபாலநாய பத்ராம் ந்ருஸிம்ஹகுஹ நாமதிஜக்முஷஸ்தே" என்கிற தேசிக திவ்ய ஸூக்தி ப்ரஸித்தம். பக்தனை சிறுக்கனிடத்தில் பரிவினாலேயே நரசிங்கவுருக் கொண்டதாக அருளிச் செய்யப்படுகிற விதில் என்ன பொருமையோ அறியோம். பட்டரும் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் "நிஜபக்தத்ருஹி ருஷ: ப்ரகர்ஷாத் விஷ்ணுத்வத்விகுண பரிணாஹோத்கடதநு:" என்று அருளிச் செய்திருப்பது முதலானவற்றைப் பன்னியுரைக்குங் காற் பாரதமாம்.

## இந்த வியாஸத்தின் ஸார ஸங்க்ரஹ ரூபமான உபஸம்ஹாரம்.

1. எம்பெருமான் தன் திறத்தில் தீங்கு செய்யுமவர்களைக் கணிசிக்க மாட்டான், தன்னடியார் திறத்தில் தீங்கு செய்யுமவர்களைச் சித்ர வதம் பண்ணியே திருப்தி பெறுவன்—என்பதுதான் சாஸ்த்ரார்த்தம்.

2. பகவதபசாரம் மாத்திரமே யுள்ளவர்களென்று சிலரை எடுத்துக்காட்டி இவர்களையும் பகவான் வதம் செய்திருக்கையாலே மேற்கூறிய நியமம் வ்யாஹதம் என்பார்க்கு இரண்டு வகையான ஸமாதானம் காண்மின். 1. பகவானைப் பாகவதர்கள் உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாமாகக் கொண்டவர்களாதலால் பாகவத த்ரோஹ மின்றிக்கே பகவதபசாரம் மாத்திரமே யுள்ளவர்களென்று சிலரைக் காட்டவே முடியாது. காட்டுகிறோமென்றால் அது மருளே. 2. தன்னளவில் தீங்கு செய்யுமவர்களைக் கணிசிக்க மாட்டானென்றதற்குத் தாற்பரியம்—பாகவத த்ரோஹிகளிடத்தில் அபரிமிதமான கறுவுதல் கொண்டவன் என்பதே.

3. "வணங்கலிலரக்கன் செருக்களத்தவிய ......அமர் செய்த வடிகள்" என்பது முதலான பல பாசுரங்களில் 'வணங்காமன்னனை இராவணனைத் தொலைத்த பெருமாள்' என்று சொல்லப் படுகிறது. இங்கு யாரை வணங்காதவன்? என்றால், தன்னை வணங்காதவன் என்று பொருள் கூறுமவர்களும் இப்படித்தான் பொருள் கூறவேணுமென்று ஆக்ரஹிக்குமவர்களும் பக்த ப்ராணனான பகவானுடைய தன்மையறியாதாரத்தனை. தன்னருகிலும் வாராமல் தன்னடியார்களுக்கே தொண்டு செய்வதாயிருந்தால் அவர்களை மிக வுகப்பதும், தன்னடியாரருகில் செல்லாமல் தன்னையே வணங்கி வழிபடுமவர்களை உகவாதொழிவதும் எம்பெருமானுடைய உண்மை ஸ்வரூபம். இதற்கிணங்கின அர்த்த நிஷ்கர்ஷமே அழகியது.

4. பாகவத த்ரோஹிகளையே ஸ்வத்ரோஹிகளாகக் கொள்பவன் பகவான்; பகவத் த்ரோஹிகளையே ஸ்வ த்ரோஹிகளாகக் கொள்பவர்— பாகவதர்கள் என்று தேசிகாதிகள் வடிக்கட்டி விளக்கியுள்ள சாஸ்த்ரார்த்த ஸாரத்தில் ப்ரதிபத்தி யில்லாதவர்கள் "வாக்ய ந்யாய விருத்தம்" என்று தலை தடுமாறாக எழுதுவதெல்லாம் சுஷ்க வாக் ஜாலமே. பணிய விசையாத தசமுகன் என்பதற்கு—தன்னைப் பணியாதவனென்று சுவைக் கேடான பொருளைக் கொண்டாலும் உண்மையில் தமரைப் பணியாதவர்களே தன்னைப் பணியாதவர்களாதலால் 'தமரைப் பனியாத' என்பதுதான் எமது கருத்தும் என்று அவர்கள் கூறி அஞ்சலித்து நிற்றல் தகும்.

5. முடிவான வார்த்தை இது கேளீர், இரணியனுக்கு பகவதபசாரம் பாகவதமஹாபசாரம் என்கிற இரண்டு முணடு. பகவதபசாரத்திற்காக அவன் கொலையுண்டானென்று கூறினல் இக் கூற்றில் ப்ரத்யவாய மொன்றுமில்லை. நம்மாழ்வார் திருவாய்மொழியில் (2–6–6) *உன்னைச் சிந்தையினலிகழ்ந்த இரணியனகல்மார்வங் கீண்ட* என்றுமருளிச் செய்துள்ளார். இதனல் பகவதபசாரத்திற்காக அவன் நிரஸிக்கப்பட்டானென்று கூறப்பட்டதாயிற்று. பாகவதாபசாரத்திற்காகவே அவன் கொல்லப்பட்டானென்பதற்கு இது விரோதி யன்று. உலகில் ஒரு காரியத்திற்குப் பலஹேதுக்களும் ஸம்பாவிதமே. ஆனல் அந்த ஹேதுக்களில் சிலவற்றுக்கு ப்ராதாந்யமும் சிலவற்றுக்கு அப்ராதான்யமும் உள்ளதென்பது நிர்விவாதம். ப்ரக்ருத விஷயத்தில் பாகவதாபசாரம் ப்ரதாந ஹேதுவாயும் பகவதபசாரம் அப்ரதாந ஹேதுவாயும் மஹர்ஷிகளாலும் ஆழ்வார்களாலும் ஆசார்யர்களாலும் கொள்ளப்பட்டிருக்கிறது. பகவதபசாரத்திற் காட்டிலும் பாகவதாபசாரம் மிகக் கொடிது என்பதே இதற்கு மூலகாரணம். *திமிம் கில திமிங்கிலேர கிலதி* என்கிற ஸங்கல்ப ஸூர்யோதய ச்லோகத்திலும் இது விசதமாகும். ப்ரதான காரணத்தைக் கூறுவதை விட்டு அப்ரதான காரணத்தை நம்மாழ்வார் ஏன் அருளிச் செய்தாரென்று சிலர் கேட்கவுங்கூடும். இதிலிருந்து ஒரு ரஸமான அர்த்தம் கிடைக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றியேயாம். அவ்வர்த்தம் யாதென்னில்; கேண்மின்:

"[உன்னைச் சிந்தையினலிகழ்ந்த] உக்திமாத்ரமன்றிக்கே நெஞ்சாலே யிகழ்ந்தானயிற்று. இத்தால்—அவன் விடுவது புத்தி பூர்வம் ப்ராதிகூல்யம் பண்ணினரை. கைக்கொள்ளுகைக்கு மித்ரபாவமே யமையும்." என்று. இதைச் சிறிது விவரிப்போம். அநுகூலர்களை அநுக்ரஹிப்பதும் பிரதிகூலர்களை நிக்ரஹிப்பதும் செய்யா நின்ற எம்பெருமான் (1) அநுகூலர்களிடத்தில் ஹ்ருதய பரிபூர்ணமான ஆநுகூல்யத்தை எதிர்பார்த்து அநுக்ரஹிப்பதில்லை; மேலெழுந்த கபட பக்தியிருந்தாலும் அதையே மிகையாகக் கொண்டு அநுக்ரஹிப்பன். (2) இங்ஙனம் பிரதிகூலர்களிடத்தில் மேலெழுந்த ப்ராதிகூல்யத்தைக் கொண்டு நிக்ரஹிப்ப

தில்லை; அந்தரங்கத்திலும் பகை யிருக்கிறதா வென்று பார்த்தே நிக்ர ஹிப்பன். முந்தின விஷயத்திற்குப்ரமாணம் *மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந* என்பது. பிந்தின விஷயத்திற்கு ப்ரமாணம் *உன்னைச் சிந்தையினு லிகழ்ந்த வென்கிற இந்தப் பாசுரம். *உளம் தொட்டு இரணிய னொண்மார்பகலம் பிளந்திட்ட* என்ற பெரியாழ்வார் ஸ்ரீஸூக்தியிலும் இச்சீரிய பொருள் கிடைக்கும். அநுக்ரஹம் செய்கைக்கு அற்ப ஹேது இருந்தாலும் போரும்; நிக்ரஹம் செய்கைக்கு அது போராது; அபரிமிதமான ஹேது இருக்கவேணும் என்பதே எம்பெருமான் திருவுள்ளமென்று இதனால் சிக்ஷிதமாகிறது. இதுவொரு சிறந்த மஹா குணமன்றோ, அல்ப ஹேதுவையும் பெரிதாக்கி அநுகூலர்களைக் கைவிடுவதும், அபரிமிதமான ப்ரீதி ஹேது இருந்தாலும் அதை நெஞ்சிற் கொள்ளாமல் வெறுப்பதுமான அஸ்மதாதிகளின் துர்குணமெங்கே! பகவானுடைய மஹா குணமெங்கே! என்று உருகுவர்கள் குணநுரக்தர்கள்.

இது போலவே, ஸாக்ஷாத்தாக நம்மிடத்திலே தீங்கு செய்பவர்களை மாத்திரம் நிக்ரஹிப்பதும், பிற பெரியார்களிடத்தில் அபசாரப் படுமவர்களைப் பற்றி ஒன்றும் கணிசியாமலிருப்பதுமான அஸ்மதாதிகளின்படி யெங்கே! ஸாக்ஷாத்தாகத் தன்னளவில் தீங்கு செய்பவர்களைப் பற்றிக் கணிசியாதே பரம பாகவதர்களிடத்தில் அபசாரப் படுமவர்களை வேரோடே களைந்தொழிக்கு மெம்பெருமான்படியெங்கே! என்றும் உள் குழைவர்கள். இவ்விரண்டு மஹாகுணமும் நரஸிம்ஹாவதாரத்திலே ரஸிகர்களால் அநுபவிக்கப் படுகின்றன. இப்படிப்பட்ட மஹா குணங்களைக் காட்டுதற்கே யாயிற்று நரகண்டீரவாவதாரம். ... *

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்

எழுதிய

**“கம்பர்கண்ட கண்டீரவம்”**

**“கண்டீரவாவதார காரண நிரூபணம்”**

முற்றுப்பெற்றன.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# துர்க்கந்த தூரீகரணம்.

**ஸ்ரீமான் ஜ்யோதிர்ப்பூஷணம் வங்கீபுரம். தி. ராஜமையங்கார்.**
**ராஜமன்னார் ஸன்னிதி.**

(ச்லோ.) வ்ருச்சிக தஷ்ட மலிம்லுச பிருதம் யஸ்மிந் விராஜதே ஸுசிராத்
தத்க்ரந்தபூதிகந்தம் தூரீகரவாணி ஸுமநஸாம் த்ருப்த்யை.

---

அடியேன் ஸமீபகாலத்தில் துலாகாவேரித் திருநாளுக்குத் திருவிந்தளூர் விடை கொண்டிருந்தேன். கீழ்த்திருப்பதியிலிருந்து அவ்விடம் வந்திருந்த வொருவர் (இவர் மடமோ முனித்ரயமோ அறியேன்; மடமாயிருக்குமென்று எண்ணினேன்) ஒருமண்டபத்திலுட்கார்ந்து கொண்டு சில ஸஜாதீயர்களுக்கு ஒரு சிறு புத்தகம் வாசித்துக் காட்டிக் கொண்டிருந்தார். நாமும் கேட்போமென்று அடியேனும் அங்குப் போய் உட்கார்ந்தேன். என்னைக் கண்டவுடனே அவருடைய கண்டஸ்வரம் இறங்கி விட்டது. அதைக்கண்டு அடியேன் எழுந்து போகப் பார்க்கையில், "ஸ்வாமீ, தேவளும் இருந்து கேட்கலாம்; அச்சேறின புத்தகந்தானே வாசிக்கிறேன், எப்படியும் இது கிடைக்கவே போகிறது; இப்போதே தெரிந்துகொள்ளும்" என்றார். இது என்ன புத்தகம்? யார் எழுதியது? என்று கேட்டேன். 'இதற்குப் பாரிஜாத புஷ்பமென்று பெயர், தேள்கொட்டினதஸ்கரமெழுதியது' என்றார். 200, 300 காபிகள் கொண்ட சிறு கட்டு ஒன்று பக்கத்தில் வைத்துக் கொண்டிருந்தாராகையால் இதில் ஒரு பிரதி கொடுக்கலாமோ? என்று கேட்டேன். அதற்கு அவர் 'இப்போது கொடுக்க முடியாது; இதையெல்லாம் அழிசிங்கரிடம் கொண்டு சேர்க்க எனக்கு நேமனம்; ஸமீபத்தில் இது வெளிவராது; வெளிவந்தால் உங்கடவர் மறுநாளே மறுப்பு எழுதிவிடுவர்; ஆகவே சிலகாலம் இப்புத்தகம் ஏகாந்தவாஸமே செய்யும்; நான் வாசிக்கின்றேன், கேளும்' என்று சொல்லி வாசித்தார். அடியேன் அங்கே போவதற்குள் சில பக்கங்கள் வாசித்தானபடியால் அதற்கு மேற்கொண்டு நாலுபக்கம் மட்டுமே வாசித்தார்.

பிரபந்தசாரம் முதலான விஷயமாகச் சில மாதங்களாய் க்ரந்த சர்ச்சை நடந்து கொண்டிருக்கிறதல்லவா? அதைப்பற்றியே அந்த தே. த. ஏதோ எழுதியிருப்பதாகத் தெரிந்தது. காஞ்சீபுரம் ஸ்வாமி தேசிகனை தூஷிப்பதற்காகவே ஜீவித்திருப்பதாகவும், அந்த ஸ்வாமிக்கு தேசிகஸூக்திகளில் குற்றம் தவிர குணமொன்றும் தெரியாதென்றும் இதில் ஆச்சர்யமொன்றுமில்லையென்றும் இதைத்தான் முதல் முதலாக என் காதில் விழும்படி வாசித்தாரவர். இது இவர்களுடைய பல்லவி தானே. இதற்கு தே த. என்கிற பிருது எதனால் கிடைத்ததென்றுபார்க்க.

அடுத்த விஷயம் என்னவென்றால், ப்ரபந்தசாரத்தை தேசிகர் எழுதினது அபத்தமென்றும், கோவில்களில் சண்டைக்குப் பல சுலோகங்களையும் பாட்டுக்களையும் கல்பனை செய்து கொண்ட போது பிரபந்தசாரமும் கல்பனை செய்யப்பட்டதென்றும் ஸ்தாபித்து முடித்த பிறகு, அந்த ப்ரபந்தசாரத்திலும் 'வையகமெண்' என்கிற பதினேழாம் பாட்டு மிகவும் பிற்பட்டதென்றும், அந்த நூலைச் செய்து முடித்தவரொருவர், பிறகு 17 ஆம் பாட்டைச் செய்து நுழைந்தவர் வேறொருவரென்றும், அந்த பாட்டில் இராமானுச நூற்றந்தாதியை ராமாநுஜர் தாமே செய்தருளியதாகக் கூறப்பட்டிருப்பது இதற்குச் சாக்ஷியென்றும், பெரியாழ்வார் இயற்றினபடியாலே பெரியாழ்வார் திருமொழி நாச்சியார் செய்தபடியாலே நாச்சியார் திருமொழி யென்கிறாப்போல, ராமாநுஜர் செய்தபடியாலே ராமாநுச நூற்றந்தாதியென்கிறதென்று மருண்டவொருவர் எழுதி நுழைத்த பாட்டே இதுவென்றும் காஞ்சீபுரம் ஸ்வாமி வெகுவிரிவாகவும் உள்ளபடியாகவும் எழுதியிருந்தார். அதற்குச் சிலர் பதிலெழுதக் கிளர்ந்து பங்கமடைந்து ஓய்ந்தார்கள். ஸ்ரீராமாயண ரீதியிலும் ஸ்ரீபாகவதரீதியிலும் இப்போது இவர் கிளர்ந்திருக்கிறார். "எந்தச் சீமையிலிருந்து எந்த டாக்டர் வந்தாலும் ப்ரேதத்திற்கு ப்ராண ப்ரதானம் பண்ண முடியாதே" என்கிற கதையாய் யார் கிளர்ந்து என்ன செய்ய முடியும். இவ்விஷயத்தில் தே. த. என்ன எழுதுகின்றதென்றால், நூற்றந்தாதி செய்யும்படி உடையவர் ப்ரேரணை பண்ணினவரென்றும், ப்ரேரகரையும் கர்த்தாவாகச் சொல்லலாமென்றும், உடையவர் இதற்கு ப்ரேரகரென்பதை காஞ்சீபுரம் ஸ்வாமியே முன்பு தமது வியாக்கியானத்தில் எழுதி வைத்து விட்டு இப்போது அவர் ப்ரேரகரல்லரென்று எழுதி தம்மையே கண்டித்துக் கொள்ளுகிறாரென்றும், 'முன்பு மூடத்தனம் நிரம்பிய காலம்; இப்போது அறிவு வெள்ளமெடுத்தோடுகின்றது போலும்' என்றும் இப்படி நிந்தா பரிஹாஸங்களை நிரப்பியிருக்கிறது. படிப்போ மூளையோ உள்ளவர்கள் இப்படியும் எழுதுவர்களா? அஹங்கார துர்நாற்றம் வீசுகிற வார்த்தையல்லவா இவை. ப்ரேரணம், ப்ரேரகர் என்கிற பதங்கள் தென்கலையாருக்கோ வடகலையாருக்கோ அஸாதாரணமல்லவே. வடமொழி பயின்றவர்கள் யாவர்க்கும் இந்தச் சொல் ஸாதாரணமன்றோ. இச்சொற்களின் பொருளை யாரும்

சொல்லக் கூடுமே. ஒரு காரியத்தில் தானாக ப்ரவர்த்தியாதவனை ப்ரவர்த்திக்கச் செய்வது ப்ரேரணை; அப்படி ப்ரவர்த்திக்கச் செய்பவர் ப்ரேரகர். அமுதனாரையழைத்து 'நீர் என் விஷயமாக நூற்றந்தாதி செய்ய வேண்டும்' என்று உடையவர் கட்டளையிட்டதாகக் கதையிருந்தால் உடையவர் ப்ரேரகராவர். இது ஸம்பாவிதமா? இப்படி யாரேனும் எழுதி வைத்திருப்பதுண்டா? என்னைக் கவிபாடும் என்று உடையவர் கட்டளையிடுவர். ஆஜ்ஞைக்கும் அநுஜ்ஞைக்கும் வாசி தெரியாமலே இது படித்து விட்டதந்தோ. ஆஜ்ஞை, ப்ரேரணை, கட்டளை இவை பரியாய மான பதங்கள். நூற்றந்தாதி இயற்றும்படி அமுதனாருக்குக் கட்டளை யிட்டவர் கூரத்தாழ்வான் முதலானவர்களேயொழிய உடையவரல்லர். உடையவர் கட்டளையிட்டாரென்று பேதையனும் பேச மாட்டானே. காஞ்சீபுரம் ஸ்வாமி எழுதியுள்ள நூல்களை யெல்லாம் இது திருப்பித் திருப்பிப் புரட்டிப்புரட்டிப் பார்க்கிறது பாவம். "மாயாம் நஸேவே" என்கிற ஸஞ்ஜயச்லோகார்த்தம் இதனிடத்தில் ஈஷத்துமில்லாமையாலே ஒன்றும் அர்த்தமாகிறதில்லை, அநர்த்தமேயாகிறது.

மேலும் இந்த விசாரம் இங்கு ஸூதராம் அவசியமற்றது. உடையவர் நூற்றந்தாதிக்கு ப்ரேரகராகவேயிருந்தாலுங் கூட அவரை ப்ரபந்த கர்த்தாவாகக் கூறுவதற்கு அணுவளவும் உபபத்தி கிடையாதே. ஸ்ரீராமாயணமியற்ற வான்மீகி முனிவர்க்குக் கட்டளையிட்டவர் நான்முகக்கடவுளென்பது ஸ்ரீராமாயணத்திலேயே ஸூஸ்பஷ்டமாக விளங்குகின்றது. (பால. 2. ஸ. 32, 36 சுலோகங்களிற் காணலாம்.) அப்படியிருந்தும் ஸ்ரீராமாயணம் சதுர்முக ப்ரோக்தமென்று சொல்லுவாரில்லை. நம்முன்னோர்கள் க்யாதிலாப பூஜாபேக்ஷையாலன்றிக்கே ஸ்வாசார்யாதிகளின் கட்டளை பெற்றே பெரும்பாலும் நூல்களியற்றுவது வழக்கம்; அதனால் கர்த்தாவின் பெயரை வேறாக்கி விடுவதென்கிற விபரீதம் பிரபந்த சாரத்தில் தவிர வேறெங்கும் கண்டதில்லை. ப்ரயோஜ்ய கர்த்தா, ப்ரயோஜக கர்த்தா என்று வடமொழியிலும், இயற்றுதற் கருத்தா ஏவுதற்கருத்தா என்று தென்மொழியிலும் சொற்களில்லாமற் போகவில்லை. அதுகொண்டு ப்ரக்ருதத்தில் யாதொன்றும் ஸாதிக்க முடியாது. நூற்றந்தாதிக்கு உடையவர் எப்படி ப்ரயோஜ்ய கர்த்தா வல்லரோ, அப்படி ப்ரயோஜக கர்த்தாவுமல்லர். அரக்கியின் செவியையும் மூக்கையுமறுக்கும்படி பெருமாள் இளைய பெருமாளுக்குக் கட்டளை யிட்டதுபோல, உடையவர் தம்மைத்துதிக்கும்படி அமுதனாருக்குக் கட்டளை யிட்டிருந்தால் ப்ரயோஜக கர்த்தாவென்னலாம். அது கிடையவே கிடையாது. நீராடாமல் போஜனம் செய்கிற ஒருவனை நோக்கி 'அப்பா! நீராடி விட்டு போஜனம் செய்' என்று ஒருவர் சொன்னால் அது எப்படி போஜனக் கட்டளையிட்டதாக ஆகாதோ, அப்படியே, ஒரு விதமாக இயற்றிக் கொணர்ந்த நூற்றந்தாதியை மற்றொரு விதமாக **இயற்றினால் நல்லது என்று கூறின உடையவர் க்ரந்த நிர்மாணக்**

கட்டளையிட்டவராகார்; ஆகார்; ஆகார். ஆகவே நூற்றந்தாதியை பாஷ்யகார ரியற்றியதாகத் தெரிவிக்கின்ற பிரபந்தசாரம் ஒரு அஸமஞ்ஜஸக்ருதியேயென்பது அவிசால்யம்.

உடையவருடைய கட்டளை யில்லாவிட்டால் நூற்றந்தாதி திவ்ய ப்ரபந்த கணையில் சேர்ந்தே யிராது'' என்றதும் அசட்டு வார்த்தை. இதில் யாருக்கும் விப்ரதிபத்தியில்லை. இதனால் உடையவர் நூற்றந் தாதிக்குக் கர்த்தாவாகத் தேற மாட்டார். 'புரோஹிதரில்லையானல் க்ருஹப்ரவேசம் செய்திருக்க முடியாது' என்று ஒருவர் சொல்லுகிறார். இது உண்மையானதே. இதனால் புரோஹிதர் க்ருஹநிர்மாதா என்று தேறிவிடுமா? கண்ணிநுண் சிறுத்தாம்பை நாதமுனிகள் திவ்ய ப்ரபந்த ச்ரேணியிலே சேர்த்தார். இதனால் நாதமுனிகள் அந்நூலுக்குக் கர்த்தா வாக ஆய்விடுவரா? இப்படி பல நூறு கேள்விகள் கேட்டால் இது திக்கு முக்கலாடி நிற்குமத்தனை. வர்ஷசதம் போராடினாலும் இதில் இதுக்கு முகபங்கமேயாகும். இதில் என்று என்ன? எதிலும் பங்கமொழிய வேறுண்டோ? "இது நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகவேண்டியிருக்க ஏன் சாகவில்லை? என்று சைத்ரன் கேட்க, அப்படியாய் விட்டால் மேன் மேலும் ஓயாது வரும் பங்கங்களைப் பின்னை யார் அநுபவிப்பது? என்று மைத்ரன் சொல்லியிருக்கிறானே, அவன் வாக்கு வேத வாக்கேயன்றோ.

இதற்குமேல் 4 என்று லக்கமிட்டு நான்காவது விஷயம் சொல்லு கிறதாம். அபத்த பஞ்சாங்கத்திற்கு அறுபது நாழிகையும் த்யாஜ்யம் என்றாப்போலே இந்த ப்ரபந்த சாரத்திற்கு எத்தனை பொத்தல் எத்தனை சொத்தல்? எத்தனை புழுத்தல்? இந்த சொத்தல் புழுத்தல்கள் யாவும் கூடி என்ன ஸ்தாபிக்கிற தென்றால், இந்த அசட்டுப் பிரபந்தத்தை சண்டப்ரசண்ட பண்டிதரான தேசிகர் ஒருகாலும் செய்திருக்கமாட்டா ரென்பதையே ஸ்தாபிக்கிறது. விஷயத்தைக் கேளுங்கள். "வேதாந்த குருமொழிந்த ப்ரபந்தசாரம்'' என்றிருக்கிறது. (ப்) என்கிற மெய் யெழுத்தை சொல்லின் ஆரம்பத்தில் பாமரனும் பிரயோகிக்கமாட்டா னென்றும், இப்படி தவருகப் பிரயோகித்தவர் தேசிகராயிருக்கவே மாட்டாரென்றும் காஞ்சீபுரம் ஸ்வாமியெழுதினார் இதற்கு இந்த ஜடங் கள் இலேசாக ஒரே வார்த்தை சொல்லி முடித்திருக்கலாம். (அதாவது) ப்ரபந்த என்றில்லை, பிரபந்த என்றுதா னுள்ளது என்று சொல்லி விட்டால் சனி விட்டது. அதில் என்ன குடி கெட்டுப்போகும். அல்லது, (ப்ரயாணம்) என்பது பயணம் என்றும், (ப்ரதிமை) என்பது பதுமை என்றும், (ப்ரக்ருதி) யென்பது பகுதி யென்றும், (ப்ராக்ருதம்) என்பது பாகிதம் என்றும், ப்ரவாளம்—பவளமென்றும், ப்ரளயம் பளயமென்றும் ஆகிறாப்போலே (ப்ரபந்தம்) என்பது பபந்தம் என்று தாராளமாக ஆகும்; இதற்கு ப்ராக்ருதச் சிதைவு என்று பெயர். ஆக (வேதாந்த குரு மொழிந்த பபந்தசாரம்) என்று தானிருந்தது என்று சொல்லிவிட்டாலும் சனி விட்டது. இதையெல்லாம் விட்டு (ப்ரபந்தசாரம்) என்று தானிருந்த

தென்று ஒப்புக்கொண்டு இது திண்டாடுகிற திண்டாட்டம் அப்பப்ப! தலைவிதியாகவன்றோ இருக்கிறது. காகம் எத்திசையு முழன்றோடியும் இளைத்து விழுந்த கணக்கிலே இதுவும் விழவேண்டியது தவிர வேறு என்ன இருக்கிறது. இதுவும் என்றால் எது? என்று கேள்வி பிறக்குமா என்ன? பிறவாது. இந்த க்ரிமிகீடம் உலகமறிந்தது தானே.

ஸம்ஸ்க்ருதத்தில் (க்ய) என்கிற ஸம்யுக்தாக்ஷரம் சொல்லின் ஆதியில் வராது என்று ஒரு பெரியவர் சொல்லுகிறார். ஏன் வராது? பாக்யம், போக்யம், யோக்யம், வைராக்யம், ம்ருக்யம் இத்யாதிகள் இல்லையா? என்கிறது இதைப்போன்றவொரு சமத்து. நாயனே! நான் சொல்லுவதை கவனியப்பா; அது இடையிலோ, கோடியிலோ வரும், முதலில் வராது என்கிறார் பெரியவர். சமத்து கேட்கிறது இடையில் வரக்கூடியது முதலில் ஏன் வரக்கூடாது. எங்கே யார் தடை செய்திருக்கிறார்? சொல்லுவீரா? எடுத்துக் காட்டுவீரா? என்று. அப்படியே இந்த சமத்தும் கேட்கிறது. இலக்கண இலக்கியங்களில் பிரவேசமுள்ளதுபோல் காட்டிக்கொள்ளப் பாடுபடுகிறது. ஆசையோ பெரிதுதான்; அத்ருஷ்டமில்லையே. சரக்குமில்லையே. இது எழுதுகிற வேடிக்கையைப் பாருங்கள்;

"வடமொழியாக்கம் என்ற தலைப்பின்கீழ் 'இணைந்தியல்காலை யரலக்கிகரமும்' என்கிற ஒரு ஸூத்ரம் அச்சிடப்பட்டிருக்கிறது"

என்றெழுதுகிறது பாவம். வடமொழி வியாகரண விசாரம் செய்கிற வித்வான்கள் ஸூத்ரவார்த்திகாதிகளை யெடுத்துக்காட்டி விஷயங்களை விளக்குவர்களே யல்லது, "இதம் ஸூத்ரம் காரகப்ரகரணே முத்ரிதம் த்ருச்யதே; ஏதத் ஸூத்ரம் ஸமாஸ ப்ரகரணே ப்ரகாசிதம் ப்ரேக்ஷ்யதே" என்று எழுதவே மாட்டார்கள். வடமொழியிலோ தென்மொழியிலோ இப்படி இதுவரை ஒருவராவது எழுதி யிருப்பதுண்டா? ஆனந்தமயாதிகரணம் என்கிற தலைப்பின்கீழ் (ஆநந்தமயோ ப்யாஸாத்) என்கிற ஸூத்ரம் அச்சிடப்பட்டிருக்கக் காண்கிறது; கீதையில் 'அத நவமோத்யாய: ப்ராரப்யதே' என்ற மகுடத்தின்கீழ் ..........இந்த ச்லோகம் அச்சிடப்பட்டிருக்கிறது. ரகுவம்சத்தில் (அத சதுர்த்தஸ் ஸர்க்க:) என்ற வாக்கியத்தின்கீழ் ஸராஜ்யம் என்கிற சுலோகம் அச்சாகியிருக்கக் காண்கிறது என்று எழுதிக்கொண்டு போகட்டுமேயிது. அச்சிட்டிருப்பதைக் காண்பது தவிர குருஸகாசத்தில் கேட்டது இதற்கு ஓரக்ஷரமுமில்லை யென்பது வெட்ட வெளிச்சமாயிற்றல்லவா? சிறிய திருமடல் முடிவில் ஊராதொழியே னென்கிற பாட்டு அச்சிடப்பட்டிருக்கக் காண்கிற தென்றெழுதிப் பட்ட பரிபவம் போராதா? இப்படிப் பட்ட அசட்டு அஸமஞ்ஜஸங்களை எவ்வளவுதான் அலசியலசிக் காட்டலாம். முராரி ஸீதையைப்பற்றி (லஜ்ஜிதுமபி லஜ்ஜதே) என்கிறார், இதற்கு லஜ்ஜை போனவிடமே தெரியவில்லையே.

மாதந்தோறும் வாரந்தோறும் வெளிவரும் விகட பத்ரிகைகளில் வேணுமென்றே ஸங்கல்ப பூர்வகமாகக் கொச்சைவார்த்தைகளையிட்டுச் சில வியாஸங்கள் எழுதி வெளியிடுவதுண்டு; அவற்றில் "அம்மா வந்துட்டா; அப்பா பூடுத்து; அத்தே அழறா. ஆச்சி சாச்சியெ பூச்சி கச்சிது, அதே பொதி கொதுதா" என்றிப்படியெல்லாம் எழுதுவது போல, அருணகிரிநாதரென்பவர் ஒரு ஸங்கல்பங்கொண்டே யெழுதினதில் [ப்ரசண்ட - ந்ருஸிம்ஹ - ம்ருகேந்த்ர] இத்தியாதிகள் யதேஷ்டமாகக் காணப்படுவதுண்டு. "அவரைப்போன்ற ஒருவரிடமிருந்தே எழுதி வாங்கப்பட்டது ப்ரபந்தசாரம்" என்கிற மருமம் இப்போது வெளிவந்து விட்டது. "அருணகிரிநாதர் என்கிற சைவர் செய்த திருப்புகழ்" என்கிறது இது. வைணவ நூல்களில் பதினாயிரம் இருபதினாயிரம் பாட்டுக்களுண்டு. தேவாரம், திருவாசகம், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்கோவையார் முதலிய பிற நூல்களிலும் லக்ஷக்கணக்கான பாட்டுக்களுண்டு. ஒன்றிலாவது இந்த விபரீதம் காட்டமுடியுமா? பிற்காலத்தவர்களான கம்பர், பிள்ளைப்பெருமாளையங்கார் போல்வாருடைய பாட்டுக்களில்தான் காட்ட முடியுமா?

நன்னூலில் "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்" என்றொரு சூத்திரம். இதனால் இலக்கியம் முற்பட்டதேயொழிய இலக்கணம் முற்பட்டதன்று என்கிற தத்துவம் வெளியாம். இதற்கு நாம் நன்னூற் சூத்திரம் காட்டவேண்டிய அவசியமுமில்லை. எந்த பாஷையிலும் முற்பட்டது லக்ஷ்யம்; பிற்பட்டது லக்ஷணம். கடல்போன்ற லக்ஷ்ய ராசிகளில் (ப்ரபந்தசாரம்) என்பதுபோன்ற பிரயோகம் ஒன்று காட்டமுடியுமா? *ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தியான அயோத்யாவாஸிகளைப்போலே இது *ஸர்வாந் சூத்ராந் நமஸ்யதியாக, அன்னவர்களிலொருவர் மலையேறி எலி பிடித்த கதையாய் சைவனுடைய பாட்டொன்றைக் காட்டிக் கொடுக்க நிதி பெற்றுவிட்டதாகக் கொக்கரிக்கின்றதிது. ஸ்ரீவைஷ்ணவர்கள் அல்லது மஹா பண்டிதர்கள் சிரமேற் கொள்ளத்தக்க நூல்களில் ஒன்றிலும் இத்தகைய விபரீதம் காணக்கிடைக்காதென்பதை இது சிலாலிகிதம் செய்து வைத்துவிட்டது.

"நாநாவ்யாகரணேஷு பஹுவித்வத் பரிக்ரஹே, சப்தாஸாதுத்வ மாஹுர் யே சாப்திகாந் தாந் ந மந்மஹே" என்று தேசிகன் அருமையாய் உபதேசம் செய்திருப்பதாக எழுதுகிறது. இந்த ச்லோகம் எங்கே யிருக்கிறது? எதற்காக ஸாதிக்கப்பட்டது? என்பதைக்கூட அறியாதிந்த யதாஜாதம். காஞ்சீபுரம் ஸ்வாமி தமது நூல்களில் எடுத்துக் காட்டியிருப்பதுகொண்டே தெரிந்துகொண்டவிது அஸ்தானத்தில் இதையெடுத்துக் காட்டுகின்றது. ஸ்ரீ பாஷ்யமங்கள ச்லோகத்தில் (ஸ்தேம) என்று பிரயோகிக்கப்பட்டுள்ள சப்தம் அஸாதுவென்றவர்களுக்கு வாய் மூடியாக தத்வடீகையில் ஸாதிக்கப்பட்ட ச்லோகமிது. (காலிக) என்று பிரயோகிப்பதைவிட்டு (காலீந) என்று பிரயோகிப்பது பிசகு - என்பார்க்

கும் வாய்மூடியாகும் இந்த சுலோகம். (ப்ரபந்தம்) என்பது அஸாது சப்த மென்பதாக ப்ரஸ்தாவமே கிடையாது. இந்த மண்டு விஷயமின்ன தென்றே புரிந்துகொள்ள மாட்டாமல் தத்தக பித்தக தாலேலோ செய் கிறது. இல்லையானல் 'வேதநூற் பிராயம் நூறு' என்கிற திருமாலை ஸ்ரீஸூக்தியையும் "சச்சம்பிரதாயம்" என்கிற உபதேச ரத்தினமாலை ஸ்ரீஸூக்தியையும் எடுத்துக்காட்டி ஆர்ப்பாடகம் செய்கிறதே, செய்யுமா? ப்ரக்ருதத்தில் அந்த ஸூக்திகளை நினைக்கவும் ப்ரஸக்தியில்லையே.

ஒரு ப்ரஸித்தமான கதை; இதினுடைய தந்தை ஒருவரைப் பார்த்து "தவ ஜ்ஞாநோ நாஸ்தி" என்ருராம். அதுகேட்டுப் பலர் சிரித்தார்களாம்- (ஜ்ஞாநঃ) என்பது அபசப்தமென்றுகொண்டு இவர்கள் சிரிக்கிருர்களென்றறிந்த அவர் "ஜ்ஞாநঃ கிடையாதா? ஜ்ஞாநঃ கிடையாதா? என்று பலரையும் கேட்டுக்கொண்டு திரிந்தாராம். யாவரும் 'வேலையற்ற ப்ராஹ்மணு! போரும் போம், போம்' என்ருர்களாம். ஆனுலும் அவர் விடாமுயற்சியாய் பலரையும் கேட்டுக்கொண்டேயிருக்க, ச்ருதப்ரகாசிகையில் (ஜ்ஞாநঃ) என்று பார்த்ததாக ஞாபகம் என்று ஒருவர் சொல்ல, அவரைப் பல மாதங்கள் இரவும் பகலும் அநுவர்த்திக்க, அவர் தேடித்தேடிப் பார்த்து 207-வது பக்கத்தில் (அவ்யாஹதஜ்ஞாநঃ) என்றிருப்பதை யெடுத்துக்காட்டி, ஜ்ஞாநঃ என்கிற சொல் அவ்யாஹத மாக வுண்டென்று ச்ருதப்ரகாசிகா பட்டர் ஸாதிப்பதாக அதற்கு அர்த்த மும் கூற, ஊரூராகச் சென்று 'ஜயித்து விட்டேன், வென்று விட்டேன்' என்று ஜயபேரி யடித்தாராம். அவருடைய ஸாக்ஷாத் அபத்யந்தானே இது. இவ்விஷயத்திற்கு மறுபடியும் வருவோம்.

துர்க்கந்தச் சுவடியில் 4 என லக்க மிட்டு இனி நான்காவது விஷயமென்றெழுதியுள்ள பகுதிக்கு இன்னும் விரிவான மறுப்புக்கள் கவனிக்கத்தக்கவை. "பதத்தின் முதலில் (ப்ர) என்றிருப்பது தமிழிலக் கணப்படி மிகத்தவறு எனப்படுகிறது" என்கிறது. மிகத்தவறல்ல; மிக மிக மிக மிகத் தவறு. "பலவருஷங்களுக்கு முன்பே (காஞ்சீ புரம் ஸ்வாமியால்) இது கூறப்பட்டிருந்தது" என்கிறது. இது வாஸ்தவம். எதையெழுதலாம், எதையெழுதக் கூடாது என்பது கூட இந்த யதாஜாதத்திற்குத் தெரிய வில்லையே. 1910-ஆம் வருஷம் முதல் ஐம்பது வருஷ காலமாக கோஷிக்கப்படுகிற இந்த அவத்யம் 1960லும் பரிஹரிக்கப்படவில்லையென்பதுதான் தேறுமிதனுல். 9ப0 வந்தாலும் பரிஹரிக்கப்படாமலே நிற்குமென்பதில் ஐயுறவேண்டா. தோஷமோ குணமோ எதுவும் ப்ரஹ்ம ஸ்ருஷ்டியிலேற்பட்டது ஒரு நாளும் மாறுபடாதன்றே. "தமிழ்நூல்களிலிருந்து இவ்வித பிரயோ கங்களை யெடுத்துக்காட்டி இதற்கு ஸமாதானம் கூறியிருந்தோம்" என்கிறது. ஐயோ! இது என்ன வெட்கக் கேடான பேச்சு. என்ன காட்டிவிட்டதிது? பாரிஜாதத்தில் நினைவூட்டியிருந்ததாம். பாரிஜாதா பஹாரணத்தில் (பக்கம் 10ல்) பதினோராவது விஷயம் வித்வான்களுக்கு

ஸதாஸர்வதா ஸ்ம்ருதியிலிருக்குமாதலால் நாம் நினைவூட்ட வேண்டியதே யில்லை. "நடுவுக்கும் ஆதிக்கும் வாசியில்லையென்னுமிவர் ஆதியிலே ஒரு உதாரணமெடுத்துக்காட்ட இன்னுமொரு பிறவி பிறக்கட்டும்" என்று அங்கே ஸ்ரீசைலம் ஸ்வாமி எழுதியுள்ளார். ஒரு பிறவியன்று; ஏழேழ் பிறவி பிறந்தாலுமாகாது. காட்டிடுறோமென்பதெல்லாம் பிறப்பகத்தே மாண்டொழிந்தனவே. முகத்தில் அசட்டத்தனமே காட்டினது.

சித்ரகூடம் என்று காட்டிற்றாம். இதற்குக் கேளுங்கள். சித்திர கூடம் என்று பல விடங்களிலிருப்பது போலவே இங்குமிருக்கலாம். மாச்சீர், விளச்சீர் காய்ச்சீர், கனிச்சீர், என்னுமவற்றிலே மாச்சீரும் விளச்சீரும் ஈரசைச்சீர்கள். காய்ச்சீரும் கனிச்சீரும் மூவசைச்சீர்கள், ஈரசைச்சீர்பயில வேண்டுமிடத்து மூவசைச்சீர் பயில்வதும் முன்னோர் நூல்களில் மிகமிகவுண்டு. ஆகவே (திருச்சித்ர) என்று காணப்படுமிடங் களிலும் (திருச்சித்திர) என்றேயிருப்பது பிரமாதமாகமாட்டாது. ஓசை யின்பம் குன்றும் என்னுமித்தனையே யுள்ளது. இதே ரீதியில் "வேதாந்த குருமொழிந்த பிரபந்தசாரம்" என்று பாடம் வைத்துக் கொண்டால் பிரமாதமொன்றுமில்லை. இந்த எளியவழி இந்த ஜடங் களுக்குத் தெரியவில்லையே. இதை காஞ்சீபுரம் ஸ்வாமியே காட்டியிருக் கிறார். அவர் காட்டினவழியையா நாம் பற்றுவதென்று லஜ்ஜிக்கும் ஜடங்களுக்கு வர்ஷசதமானாலும் உய்யும் வகையில்லைதான்.

"போனது போகட்டும்; இப்போது அந்த வழியைப்பற்றுகிறோம் உய்ந்து போகிறோம்" என்னில், பிரபந்தசாரத்தின் பொற்றல்கள் ஒன்றிரண்டன்றே; எத்தனை பொற்றலென்று அடைப்பீர்கள். உண்மைக்கு இசைந்து கைகூப்புவது தவிர உய்யும்வகை வேறில்லை யென்று சிக்கனக் கொள்ளுங்கள். "ஸூத்ரம் பொதுவாயிருந்தும் நடு வில் இகரம் வராமலிருக்கலாமெனில் ஆதியிலும் வராமலிருக்கலாமென்ப தற்குத் தடையென்ன?" என்று உறுமுகிறது. சூத்திரத்தைப்பற்றி விஷயமே கிடையாது. ஆழ்வார்களும் ஆசாரியர்களும் நன்னூல் சூத்திரத் தைப் பார்த்தா பிரயோகித்தார்கள்? ஆசௌச சதகமும் வைத்திய நாதீய மும் அவதரித்த பின்பா ஆசௌசம் கொண்டாடப்பட்டது. ப்ரமாணங் களுக்கும் அநநுஷ்டாந லக்ஷண அப்ராமாண்ய முண்டென்பதுபோல, இதற்குமுண்டு. அநுஷ்டாந ப்ராதாந்யம் போலே ப்ரயோக ப்ராதாந்ய முணரத்தக்கது. அபத்த சைவப்ரயோகத்தை விட்டுத் தொலைத்து ஸுபத்த வைஷ்ணவப்ரயோகம் காட்டவழியில்லையே.

"ஆழ்வார் தவறித்தான் போய்விட்டாரென்னில், அவரைப் பின் பற்றி தேசிகரும் தவறிவிட்டாரென்றிருக்கட்டுமே" என்கிறது. ஒரு வரும் தவறவில்லை; சண்டைக்காரர்களின் வேண்டுகோளுக்கிணங்கி யெழுதிக் கொடுத்தவொருவனே தவறிவிட்டான். "விஷயத்தை அலசிப் பார்த்து ஸாதித்தருள வேண்டும்" என்கிறது. 50 ஆண்டுகட்கு முன்

ணமே அலசியலசிக் கண்டும் காட்டியுமான விஷயத்தில் இதுகளின் அசட்டுத்தனந்தான் அலசப்படவேண்டும்; அலசியாகிறது. "ஸமாதாஞ பாஸம் உளறப்படுகிறது" என்று தான் பயின்ற பாஷையைக் கொட்டு கிறது. 'நிந்தாபிச் சேஷபூரணம்' தெரிந்ததுதானே. இது உளரு மல் பிதற்றட்டுமே. விஷயமில்லையே, என்னபண்ணுவது. எரிச்ச லானல் ஏரியில் விழுவது.

"ஸூத்ரத்தில் ஸமாஸத்திலடங்காத" என்றெரு களேபரம் கிளப்பு கிறது. அகாண்டே கிளப்பிவிட்டு 'தத்புருஷ ஸமாஸம், மத்யம லோபி ஸமாஸம்' என்று ஏதேதோ ஜரத்கவாதிவாக்யார்த்தமும் எழுதுகிறது. இதையெல்லாம் திருக்குடந்தை கண்ணபிரான் கேட்டால் மிகவுகப்பர். யதிகள் ஜோடு சால்வை போர்ப்பர். "இப்படி திண்டாடுவதைக் காட்டி லும்..." என் கிறது. திண்டாடுவதோ தண றுவதோ திக்குமுக்கலாடுவதோ எல்லாம் இந்த யதாஜாதத்திற்கல்லது மற்றெருவர்க்கு ஏது?

"மற்றவிடங்களில் எப்படியிருந்தாலும் ப்ரபந்தசாரத்தில்(ப்ர)இருக் கக்கூடாது என்று ஒரே அவதாரணம் செய்துவிட்டால் பிறர் வாய்திறக்க வழியில்லைதான்" என்கிறது. இது சரிதான்;—மற்றவர்களிலுங்காட்டில் தேசிகனுக்கு வெகு ஏற்ற முண்டாதலால் அவருடைய க்ருதியில் சப்பைக் கட்டுகள் கூடாதுதானே.

"சங்கர பாக்கர" என்றெடுத்து ஏதோ அர்த்தமில்லாமல் எழுதுகிறது. "யாதவபாட்டப்பிரபாகரர்" என்றல்லது வேறு வகை யான பாடம் எந்தப்பதிப்பிலும் காணக்கிடைக்காது. "பாட்டப்ர பாகர" என்றிருந்தாலும் குற்றமில்லையென்றது குற்றமற்றதே. இதில் முக்கியமான கேள்வி இது. (சங்கரபாக்கர) என்கிற நாள்பாட்டு மணவாள மாமுனிகளருளிய தென்கிற உண்மையை இசைந்து முன்பு இதில் ப்ரத்யவஸ்தானம் நடந்தது. ந்ருஸிம்ஹப்ரியாவில் வெளிவந்த பிரபந்தா நுஸந்தான தீபிகையில் இதற்குக்கர்த்தா உடையவர் காலத்தவராக ஏற்பட்டிருக்கிறுர். இவற்றில் ஒரு நிலைகொள்ள முடியுமோ? 'இன்னும் சிலநாள் கழித்து" என்று தொடங்கிய பேச்சு இந்த அவ்யவஸ்தித சித்தர்களுக்கே. "நாநாவ்யாகரணபிஜ்ஞ" என்றதைக் காட்டினதைவிட "அமரா நிர்ஜரா தேவா" அல்லது "விநாயகோவிக்நராஜ" இவற்றைக் காட்டியிருக்கலாம். நன்னூலின் முடிவில் "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல காலவகையினனே" என்பது ஒரு சூத்திரம். அதை ஒரு சதுர்த்தனிடம்கேட்டு எழுதத் தெரியவில்லையே இதற்கு. "காஞ்சீபுரம் ஸ்வாமி ஸித்தாந்தம் செய்த விஷயங்களில் வாய்திறக்க வல்லாரார்?" என்று பாரிஜாதாப ஹரணத்தில் ஸ்ரீசைலம் ஸ்வாமி யெழுதியிருப்பதில் முதல்கையெழுத்திடுபவர் D. R. ஸ்வாமி. இது சார்வாகன் என்கிறது. வயிற்றெரிச்சலுக்குப் போக்குவீடு வேறென்ன?

"இணைந்தியல்காலை" என்ற சூத்திரத்தின் பொருளை இந்த யதாஜாதத்தினிடம் யாரும் அறியவேண்டா, "ப்ரவ்ருத்திக்கிறது" என்கிற

விது மிகத்தவறான பிரயோகம் என்பதைக்கூட அறியமாட்டாத வித்துவா நூலெழுத முன்வருவது! வர்த்திப்பதுண்டே யொழிய வ்ருத்திப்பதில்லை கிடாய். ஸம்ஸ்க்ருதச் சொற்களைமாற்றாமல் உள்ளபடியே ப்ரயோகிக்கலா மென்பதற்கு அமல, விமல, இத்யாதி பரச்சத தத்ஸமச் சொற்களுண்டு. ப்ரபந்த என்பது பிரபந்த என்றாகியே தீரும். பிரபந்த சாரச்சண்டையை வெகுதூரத்தில் விட்டிட்டு இவ்விசாரத்தைத் தனியாய் வைத்துக்கொண்டு கைத்திறம் காட்டட்டும்.

" தமிழிலக்கணத்தில் உண்மையை தேசிகன் செவ்வனே யறிவ ராதலால்" என்றது ஸத்யமானவார்த்தை. ஆனதுபற்றியே ப்ரபந்தசாரம் என்கிற அவத்தச்சுவடி அவரது திருவாக்கில் ஒருநாளும் வாராதென்று காஞ்சீபுரம் ஸ்வாமி குடப்பாம்பில் கையிட்டுரைக்கின்றார். "இளைத்து விழுங் காகம்போல்" என்றவிடத்து (அ. கி.) உரையில் "தேசிகனுக்கு இதில் காகமே ஆசார்யன்போலும்" என்றெழுதிற்று இதனுடையஜ்ஞாதி. இது அருணகிரி நாதரையே ஆசாரியராக அவதாரணம் செய்கிறது.

உப்பிலியப்பன் ஸன்னிதியில் வாழும் ஸ்ரீஉவே. வித்வான் நவநீதம் ஸ்ரீராமதேசிகாசாரியர் ஸ்வாமி மிகவும் பிரமாணிகர். இவர்களின் கைதவங்களை யெல்லாம் அந்த ஸ்வாமி நன்றாகக் கண்டிப்பவர். அவரால் வெளிவந்த ஒரு விஷயத்தை மட்டும் இங்கே தெரிவிக்கிறேன். ஆசார்ய ஹ்ருதயத்தில் வில்லிபுத்தூர்ப்பகவர் வார்த்தை யென்றவிடத்தை யெடுத்துக்கொண்டு இவர்கள் பண்ணின அட்டஹாஸங்களை யெல்லாம் அவர் கண்டு மிகவும் வெறுத்தார். (Late) ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமியும் இந்த ஸ்வாமியும் சேர்ந்து எழுதிய திருப்பல்லாண்டு உரை ஸேவா பத்ரி கையில் (1955 ஆகஸ்டு—மன்மதரு ஆவணியிதழில்) ஒரு பாகம் வெளி வந்திருக்கிறதாம். அதில் 19-வது பக்கத்தில் "எங்கள் குழுவினில் புகுத லொட்டோம்" என்றவிடத்தில், துறைவேறிடுவித்த சுலோகங்களைப் பூர்த்தியாக வெழுதிப் பொருளுமெழுதி "இந்த ப்ரமாணவசனங்களை யுட் கொண்டே ஆழ்வார் வாழாட்பட்டு பாசுரம் அருளிச் செய்ததாக எழுதி யிருக்கிறார்களாம். இவர்கள் எதையும் பாராமல் வெறும் துராக்ரஹமே தலையெடுத்து ஸஹஸா கைபோனபடி யெழுதிவிட்டுப் பிடிபட்டு நிற் பதற்கு அவர் மிகவும் வருந்தினார்.

இந்த தே. த. வுக்கு எச்சரிக்கை. (1) இது தேசிகஸூக்தி தூஷ ணத்தில் பழுத்திருக்கிறது. தத்வடீகா ஸ்ரீஸூக்தியை அஸமஞ்ஜஸ மென்னாமல் மிகவும் அஸமஞ்ஜஸ மென்று தூஷித்து புத்தகம் அச்சிட் டிருப்பதை திருக்குடந்தை வித்வானொருவர் எடுத்துக்காட்டினாரே, அதற்கு இது என்ன பதில் சொல்லுகிறது? தே. த. ஸரிதான் என்கிறது. (2) உடையவரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து வடகலைத் திருமண்களை மாற்றித் தென்கலையாக்கி விட்டதாக எழுதிற்றே; இதற்கும் தே. த. பிருது ஸரிதானென்பது தவிர வேறில்லையன்றோ. நிற்க.

**ப்ரபந்தசாரம் நவீநகல்பித மென்பதை உலகமெல்லாம் நம்புமாறு ஒரே விஷயம் காட்டுவோம்.**

காஞ்சீபுரம் ஸ்வாமியின் ஆராய்ச்சியென்றால் அதற்குத் தனிப்பட்ட மதிப்பும் சிறப்புமன்றோ மேதாவிகளின் திரளில் பேசப்படுவது. மற்றெல்லா விஷயங்களையும் விட்டிட்டு இவ்வொரு விஷயத்திற்குமட்டும் பதில் சொல்லிவிடுங்கள் போதும். சொல்லிவிட்டால் ப்ரபந்த சாரத்தை ஸகல திவ்ய தேசங்களிலும் ஸேவாகாலம் பண்ண நாமே முன்னின்று ஏற்பாடுகள் செய்வோம். பராதீனமானவது முடியாமற் போனாலும், ப்ரபந்தசாரம் தேசிகர் ஸாதித்ததுதான் என்றும், தேசிகர் வடகலை குரு தான் என்றும், ராமாநுஜ தயாபாத்ராதிகளெல்லாம் ஸத்யந்தான் என்றும் லக்ஷம் பிரதிகள் அச்சிட்டு உலகமெல்லாம் பரப்புவோம். இனி, தே. த. மற்றை விஷயங்களை விட்டு இந்த வொன்றில் மட்டும் எழுதட்டும். அம்ருதரஞ்ஜனி அம்ருதாஸ்வாதிநி, அதிகார சங்கிரகம்....இத்யாதி நாமங்களை யிட்டுப் பிரபந்தமாக தேசிகர் செய்யவில்லையென்றும், அவருடைய ரஹஸ்ய நூல்களில் ஆதியந்தங்களிலும் இடையிடையிலும் சுலோகங்கள் போலே சேர்த்த செய்யுள்களைப் பிற்காலத்தவர்கள் கோவில்சண்டைக்காகத் தனிப் பிரபந்தமாக்கினார்களென்றும் காஞ்சீபுரம்ஸ்வாமி பிறர் மறுப்புரைக்க முடியாதபடி நிரூபணம் செய்திருக்கிறார். இத்தகைய பிரபந்தங்களிலும் ஸரி, மற்றும் அடைக்கலப்பத்து, அர்த்த பஞ்சகம், வைஷ்ணவ திநசரி, திருச்சின்னமாலை, பன்னிரு நாமம், திருமந்திரச் சுருக்கு, துயச் சுருக்கு, சரமச்லோகச் சுருக்கு, கீதார்த்த ஸங்கிரகம், மும்மணிக்கோவை, நவரத்தினமாலை, ஆஹார நியமம் என்னும் பிரபந்தங்களிலும் ஸரி ஒரு பிரபந்தத்திலாவது வேதாந்தாசாரியர் ஸாதித்தது என்று பொறித்திருப்பதுண்டோ? கிடையவே கிடையாது. ஒன்றிலும் கிடையாது. இருந்தால் எடுத்துக்காட்டலாமே. அத்திகிரிமாகாத்மியத்தின் முடிவில் காண்கிற வெண்பாவின் தன்மையை காஞ்சீபுரம் ஸ்வாமி விரித்துரைத்திருக்கிறார். ஸ்வாமி உரைத்திருப்ப திருக்கட்டும். அந்த வெண்பாவை யார் பார்த்தாலும் தத்துவத்தை எளிதிலுணரத் தடையில்லை. உபதேசரத்தினமாலையின் முடிவில் அநுஸந்திக்கப்பட்டு வருகிற 'மன்னுயிர்காளிங்கே' என்கிற வெண்பா போலவும், திருமடல்களின் முடிவில் அநுஸந்திக்கப்படுகிற வெண்பாக்கள் போலவுமன்றோ அது உள்ளது. இது கிடக்கட்டும். தேசிகனுடைய க்ரந்தங்களில் ஒவ்வொன்றிலும் முடிவில் தம்முடைய திருநாமம் நிர்தேசிக்கப்பட்டிருப்பதைக் காண்பவர்கள் இந்த தமிழ்ப் பிரபந்தங்களில் ஏன் ஒன்றிலும் திருநாமத்தை நிர்தேசியாமல் விட்டாரென்று ஆராய்ச்சி செய்தே தீரவேண்டும். மனதை நடுநிலையில் வைத்துச் செய்யவேண்டும். அப்படிச் செய்பவர்கள் எவ்விதமான ஸமாதானமாவது தெரிவிக்கட்டும்; அதைப்பற்றி நமக்குக் கவலையில்லை. ஒரு பிரபந்தத்திலும் திருநாம நிர்தேசம் கிடையாதென்பதைத் தலைவிதி

யாய் இசைந்து தீரவேண்டியதாயிற்று. ஒரு பிரபந்தத்திலும் நூலின் பெயரோ, நூலாசிரியரின் பெயரோ கிடையவே கிடையாது என்பது கல்வெட்டாகத் தேறியிருக்க, விவாதச் சுவடி யொன்றில் மட்டும் "வேதாந்த குரு மொழிந்த ப்ரபந்த சாரம்" என்கிற அபத்த சாரம் காணப்பட்டால் இதுகொண்டே இவர்களின் வேலைத்திறம் வெட்டவெளிச்சமாகவில்லையா? களவுகளையும் சூதுகளையும் கண்டுபிடிக்காத வரையில் "ஆருமில்லாத வூரில் அச்வமேதயாகம் பண்ணுகிற" கதையாய் எவ்வளவும் தடபுடல்செய்யலாம், கையும் கன்னக்கோலுமாகக் கண்டுபிடித்தான பின்பும் உறுமிக்கொண்டிருந்தால் ஊமையரும் வாளாவிருக்க கில்லாரன்றே. கேட்ட விஷயத்திற்கு பதில் சொல்லுகிற வழக்கந்தான் இதினிடம் கிடையாதே. என்னென்ன எழுதுகிறதோ எழுதட்டும். அம்மா போட்டின செவ்வெண்ணெயெல்லாம் வெளிவரட்டும் துர்க்கந்தச்சுவடி வெளியில் தலைக்காட்டட்டும்.

அஹோபில மடத்தில் இருபத்தோராவது பட்டத்திலும் முப்பத்து நான்காவது பட்டத்திலுமிருந்த ஜீயர்களிருவர் அடைக்கலப்பத்து என்ற பெயரால் இரண்டு பிரபந்தங்கள் செய்திருக்கிறார்கள்; அவற்றை மடத்தார் தம் மடங்களிலும் க்ருஹங்களிலும் சேவாகாலம் செய்து வருகிறார்கள். தேசிக ப்ரபந்தமாகச் சொல்லுகிற அடைக்கலப் பத்து முதலானவைகளும் அதே சாயலாகவும் அதே சைலியாகவுமிருப்பதால் இவையும் அவர்களே செய்தவையென்றுதான் தத்வ வித்துக்கள் நிஷ்கர்ஷித்திருக்கிறார்கள். அது எப்படியாவது கிடக்கட்டும், பிரபந்த சாரத்தை தேசிக க்ருதியாகக் காட்டுவதற்கு இவர்கள் எவ்வளவோ பாடுபட்டிருக்கிறார்களென்பது நன்றாகக் காட்டப்பட்டுவிட்டது. (வேதாந்த குரு மொழிந்த ப்ரபந்தசாரம்) என்று இந்நூலில் பொறித்ததுபோல் மற்ற நூல்களிலும் ஒவ்வொரு பாட்டுச் செய்து சேர்த்துவைக்க மறந்தொழிந்தார்கள். மருமங்களையும் சூதுகளையும் இப்படி உட்புகுந்து யார் கண்டு பிடிக்க முன் வரப் போகிறார்களென்று எண்ணி விட்டார்கள். உலகில் பெரிய பெரிய களவுகள் செய்பவர்கள் இது யாராலும் கண்டு பிடிக்க முடியாதென்று துணிந்தே செய்கிறார்கள். சில களவுகள் அத்ருஷ்ட விசேஷத்தால் ஜீரணமாகி விடுகின்றன. சில களவுகள் உடனேயோ, சில மாதங்கள் பொறுத்தோ, பலவாண்டுகள் பொறுத்தோ வெளி வந்தே விடுகின்றன. அந்த ரீதியில் பிரபந்தசாரம் முதலியவற்றின் மருமம் வெளியாவதற்கு இத்தனை வருஷங்களாயின. இதுவோ பகவத் ஸங்கல்பம். இதைக் கிளறக் கிளற இன்னமும் ஆச்சரியமான தத்துவங்களை வெளிவந்து ஊர்ஜிதமாகுமென்பதில் ஐயமில்லை.

**முடிவில் விண்ணப்பம்:** அடியேன் தற்காலம் நன்னிலத்தில் கெ. 39, மேல அக்ரஹாரத்தில் வாஸம் செய்கிறேன். இந்த விசாரங்களில் யார் எது வெளிபிட்டாலும் எனக்கு அனுப்பவேணும்.

இங்ஙனம்,

**தி. ராஜமையங்கார்.**